

விட்டுவிடுதலை யாகிநிற்பா யிந்தச்
சிட்டுக் குருவியைப் போலே



தும்பி சிறுவர் மாத இதழ்
ஜுலை 2016
தனிச்சுற்றுக்கு மட்டும்

கதைத் தேர்வு
கயித்தமலை

நிர்வாக ஆசிரியர்
அழகேஸ்வரி

ஆசிரியர்
சிவராஜ்

இதழ் வடிவமைப்பு
கல்ஆல்

தொடர்புக்கு
எண் 60/86, ஐயங்குளத் தெரு,
திருவண்ணாமலை - 606 601
பேச - 9843870059
*thumbigal@gmail.com*

நன்றியும் ப்ரியமும்

ஓ.வி. சரவணகுமார்
பழனியப்பன்
ஹரிஹரன்
சுதாகர்
விசயகுமார்
கவிதா முரளிதரன்
அஸ்வின்
பூபதி நரன்
எஸ். பாலபாரதி
சிலம்பம். சசி
ஹேமலதா
மின்னம்பலம்
இரா.தியாகராஜன்
கார்த்தி
அடவி முரளி
கோவை அருண்
கிஷோர்
கரு.பழனியப்பன்
வானம் காந்தி
கதிர் ஆறுமுகம்
கிருஷ்ண பிரபு
பார்வதி
சீனுவாசன்
ஆராதனா
விருமாண்டி
ஒய்ட்டி
மது

பிரார்த்தனை
யானைகளுக்கு

அன்பின் நன்றி
கதைகளைக் கண்டெடுத்து
எல்லோரிடத்தும்
கொண்டு சேர்க்கும்
துளிகாவுக்கு

வணக்கம் செல்லங்களே,

முதல் கதை சலேத்தா எல்லாருக்கும் பிடிச்சிருந்துச்சா?
முதல் சிறகசைப்பிலேயே தும்பி நெறைய குழந்தைங்ககிட்ட
போனது ரொம்பவும் மகிழ்ச்சியா இருக்கு.

இதோ ...

இந்த தடவையும் உங்களுக்காக ஒரு கதை கொண்டு வந்திருக்கேன்.
ஒரு பறவை, ஒரு மலை, ஒரு காடு இவங்கள பத்தின கதை இது.
படிச்சிட்டு எப்படி இருந்துச்சுன்னு எனக்கு சொல்றீங்களா?

இந்த புத்தகத்தோட கூடவே ஒரு காய்கறி விதையும், ஒரு மரவிதையும்
இருக்கு. அத நட்டுவச்சு தண்ணி ஊத்தி பத்திரமா வளர்ப்பீங்களா?

வாங்க வாங்க தும்பிகளா ...

கதை காட்டுக்கு உள்ளே போவோம்.
சிறகடிச்சு பறந்திடுவோம்.
வானம் திறந்தேயிருக்கு.

அன்புடன்
தும்பி

# பறவையை
# நேசித்த மலை

கதை
எலிஸ் மக்லெரன்

ஓவியங்கள்
ஸ்டீபன் எட்கென்

தமிழில்
சரவணன்



பெரிய பாலைவனம்.
அங்கே ஒரே ஒரு மலை மட்டும் தனியாக இருந்தது.
இறுகிப்போன பாறையாக இருந்த அந்த மலையின் மீது
ஒரு செடி, கொடி கூட வளரவில்லை.
அதனால் அங்கே எந்த விலங்காலும்,
பறவையாலும், பூச்சியாலும் வாழ முடியவில்லை.
எனவே அந்த மலைக்கு துணைக்கு அங்கு யாருமே இல்லை.

வெயில் அடித்தாலும், காற்று வீசினாலும்
மலை அப்படியே இருக்கும்.
எப்போதாவது பெய்யும் மழையையும்,
பனியையும் தவிர அதற்கு உணர
வேறு ஒன்றுமே அங்கில்லை.

ஒவ்வொரு நாளும் மலை, வானத்தில் மிதந்து கொண்டிருக்கும்
பெரிய பெரிய மேகங்களையும், பகலில் சூரியனையும்,
இரவில் நிலாவையும் விடாமல் பார்த்துக்கொண்டிருக்கும்.
இரவு நேரங்களில், மேகங்கள் இல்லாத போது
தூரத்தில் சின்னச் சின்னதாக நட்சத்திரங்கள்
மின்னிக் கொண்டிருப்பதைப் பார்க்கும்.
இதுதான் மலையின் ஒரே பொழுதுபோக்கு.



ஒரு நாள் திடீரென்று ஒரு சின்ன பறவை அங்கே பறந்து வந்தது. மலையைச் சுற்றி ஒரு வட்டம் போட்டு, மலையில் நீட்டிக்கொண்டிருந்த ஒரு கல்லின் மேல் வந்து உட்கார்ந்து, தன் உடம்பை ஒரு உலுக்கு உலுக்கியது. இதைப் பார்த்த மலைக்குப் பெரிய ஆச்சரியம்; ஏனென்றால் இதைப் போல ஒன்று இதுவரை அதைத் தேடி வந்ததில்லை. பறவையின் விரல்கள் தன்னைப் பிடிப்பதை மலை உணர்ந்தது; பறவை, மலையின் முதுகில் சாய்ந்தபோது அதனுடைய இறக்கைகள் மெத்தென்று இருந்தது.

''யார் நீ? எங்கிருந்து வருகிறாய்?'' என்று கேட்டது மலை.



அதற்கு அது, ''நான் ஒரு பறவை, பச்சை பசேல்ன்னு ரொம்ப பசுமையா இருக்கிற இடத்திலிருந்து வரேன். ஒவ்வொரு வசந்த காலத்திலேயும் ரொம்ப தூரமா, உயரமா பறந்து என் குஞ்சுகளை கூடு கட்டிப் பாதுகாக்க நல்ல இடமா தேடுவேன். அதுக்குதான் வந்தேன். இங்க கொஞ்சம் நேரம் இளைப்பாறிட்டு, பிறகு மறுபடியும் தேடிப் பறக்கணும்'' என்றது.

''பறவையே, உன்னப் போல யாரையும் நான் பார்த்ததே இல்லை, நீ போய்த்தான் ஆகணுமா? கொஞ்ச காலம் இங்கயே எங்கூட தங்கிட்டுப் போயேன்'' என்று கேட்டது மலை.

ஆனால் பறவை மறுத்து. ''உன்ன மாதிரி இல்லை, பறவைகளுக்கு உயிர் இருக்கு. எங்களுக்கு உயிர்வாழ தண்ணியும் உணவும் வேணும். இங்க எனக்கு சாப்பிட ஒண்ணுமே இல்லையே; நான் தண்ணி குடிக்க ஒரு ஓடைகூட இல்லையே'' என்றது.

''சரி, உன்னால இங்கயே தங்க முடியாது, ஆனால் எப்பவாவது திரும்பி இங்க வருவியா?'' என்று கேட்டது மலை.

பறவை ஒரு நிமிடம் யோசித்துவிட்டு, ''நான் ரொம்ப தூரமான இடத்துக்கெல்லாம் பறந்து போயிருக்கேன், பல மலைகள் மேலே ஓய்வு எடுத்திருக்கேன். ஆனா எந்த மலையும் உன்ன மாதிரி என்னபத்திக் கவலைப்பட்டதில்ல. எனக்கும்கூட திரும்பி வரணும், உன்னப் பாக்கணுமுன்னுதான் தோணுது. ஆனா அது கூட வசந்த காலத்தில மட்டும்தான் முடியும், அப்ப கூட கொஞ்ச நேரத்துக்குத்தான் தங்க முடியும். ஏன்னா இந்த இடத்திலிருந்து உணவு, தண்ணிக்கெல்லாம் ரொம்ப தூரம் போகணுமே. உணவு, தண்ணி இல்லாம என்னால ரொம்ப நேரம் உயிர் வாழ முடியாது'' என்றது.

மலை மறுபடியும் சொன்னதையே சொன்னது. ''உன்ன மாதிரி யாரையும் நான் இதுவரைக்கும் பார்த்ததில்லையே. பரவாயில்ல, கொஞ்ச நேரத்துக்கு நீ வந்தாக்கூட எனக்கு அது சந்தோஷம்தான்''.

பறவை சொன்னது. ''சரி, ஆனா நீ ஒரு விஷயத்தைப் புரிஞ்சிக்கணும். மலைகள் எப்பவும் இருக்கும், ஆனால் பறவைகள் அப்படி இல்ல. ரொம்ப காலம் உயிர் வாழாது. அதனால என் வாழ்க்கையில வரும் ஒவ்வொரு வசந்தகாலத்திலயும் நான் உன்ன தேடி வந்தாக்கூட, நம்ம சந்திப்புகள் இன்னும் கொஞ்ச காலம்தான்''.

மலை சொன்னது, ''நீ வருவது நின்னு போனா எனக்கு ரொம்ப வருத்தமாத்தான் இருக்கும். ஆனா அந்த சில சந்திப்புகள் கூட இல்லைன்னா எனக்கு கஷ்டமாயிடும். ஏன்னா நான் உன்ன மாதிரி யாரையும் பார்த்ததே இல்ல. தெரியுமா?''

பறவை யோசித்துக் கொண்டே மலையின் மீது கொஞ்ச நேரம் உட்கார்ந்திருந்தது; பிறகு மணியோசையை போல தன் இதமான குரலால் ஒரு பாட்டைப் பாடியது; அதுதான் மலை கேட்ட முதல் பாட்டு.

பாடி முடித்ததும் சொன்னது, ''இதுவரை நான் வந்து போவதைப் பத்தி எந்த மலையும் கவலைப்பட்டதே இல்ல. அதனால் உனக்கு மட்டும் ஒரு சத்தியம் செஞ்சு கொடுக்குறேன். நான் உயிரோட இருக்கிற வரைக்கும் ஒவ்வொரு வசந்த காலத்திலயும் உன்னப் பார்க்க வருவேன். வந்து உன்னச் சுத்தி பறந்து, உன் கூட உட்காந்து உனக்காக பாட்டெல்லாம் பாடுவேன். இருந்தாலும் என் வாழ்க்கை ஒரு நாள் முடியும் இல்லையா? அதனால என்னுடைய குஞ்சுக்கும், இங்க வருவதுக்கு வழிய சொல்லிக் கொடுக்குறேன். அதுவும் அதோட குஞ்சையும் உன்ன வந்து பார்க்கச் சொல்லி அனுப்பி வைக்கும். ஒவ்வொரு பறவையும் உனக்கு மகிழ்ச்சியைக் கொண்டு வருவாங்க. அதனால எத்தன வருஷமானாலும் உன்னோடு சேர்ந்து, பாட்டு பாடி, விளையாட ஒரு பறவை துணையிருக்கும். சரியா?''

மலை மறுபடியும், ''நீ இங்கேயே இருந்தா எனக்கு நல்லா இருக்கும். பரவாயில்ல, நீ திரும்ப வருவதை நினைச்சா ஆறுதலா இருக்கு''.

பறவை சொன்னது, ''சரி நேரமாயிடுச்சு. நான் கிளம்பணும், ரொம்ப தூரம் பறந்தாத்தானே உணவும், தண்ணீயும் கிடைக்கிற இடங்களுக்குப் போய்ச் சேர முடியும். அடுத்த வருஷம் பார்க்கலாம்''. இதைச் சொல்லிவிட்டு சர்ரென்று வானத்தை நோக்கிப் பறந்தது. அதனுடைய இறக்கைகள் விசிறியைப் போல விரிந்து சூரியனையே மறைத்துக்கொண்டன. மலை, பறவை மறையும் வரை அதையே பார்த்துக்கொண்டிருந்தது.



பிறகு, ஒவ்வொரு வருஷமும் வசந்த காலத்தில் ''நான் பறவை வந்திருக்கேன், உன்னப் பார்க்க'' என்று பாடியபடி மலையின் மீது ஒரு பறவை வந்து அமரும். சில மணி நேரங்களுக்கு மலையை சுற்றிப் பறந்தோ, இல்லை அதன் மேடுகளில் அமர்ந்தோ பாட்டுப் பாடி நேரத்தைக் மகிழ்ச்சியாக கழிக்கும்.

அது கிளம்பிப் போகும் நேரம் வரும்போது, ஒவ்வொரு தடவையும் மலை ''நீ இங்கேயே இருக்க வழியே இல்லையா?'' என்று கேட்கும். பறவையும் ஒவ்வொரு முறையும், ''ம்ஹூம், அடுத்த வருஷம் திரும்பி வரேன்'' என்று சொல்லி பறந்துவிடும்.



அதேபோல் ஒவ்வொரு வருஷமும் பறவை வருவதை, மலை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்து காத்திருக்கும்; அதேபோல ஒவ்வொரு வருஷமும் அது தன்னைவிட்டுப் போகும்போது அதிகமாக வருத்தப்படும். இப்படியே தொன்னூற்று ஒன்பது வசந்த காலங்கள் வந்து போயின. நூறாவது வசந்த காலத்தில் பறவை தன்னை விட்டுப் போகும் நேரம் வந்தபோது, ''நீ இங்கேயே இருக்க வழியே இல்லையா?'' என்று மலை மறுபடியும் கேட்டது. பறவையும் வழக்கம் போல, ''ம்ஹூம், அடுத்த வருஷம் திரும்பி வரேன்'' என்று சொல்லிவிட்டு பறந்து விட்டது.

இந்த முறை பறவை தன்னை விட்டுப் பிரிந்துபோவதை மலையால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. மலை, இதயம் வெடித்து அழுதது. அதன் இறுகிய பாறை விரிசலாகி, அதிலிருந்து கண்ணீர் ஒரு நீரோடையைப் போல சரிந்து ஓடியது.

அடுத்த வசந்த காலம் வந்தது. ஒரு சின்னப் பறவை வந்து, ''நான் பறவை வந்திருக்கேன். உன்னப் பார்க்க'' என்று சொன்னது. மலை எந்த பதிலும் சொல்லவில்லை. அது தன்னை விட்டு போகப் போவதையும், அது அடுத்த முறை வருவதற்கு இடையே உள்ள நீண்ட காலத்தையும் நினைத்து அழுதுகொண்டிருந்தது. பறவைக்கு ஒன்னும் புரியவில்லை, தான் எப்போதும் உட்காரும் இடத்தில் உட்கார்ந்து மலையின் அந்தக் கண்ணீர் ஓடையை கண் இமைக்காமல் பார்த்தது.



பிறகு எப்பவும் போல மலையைச் சுற்றிப் பறந்து பாட்டு பாடியது. அது கிளம்பும் நேரம் வந்தபோது ''அடுத்த வருஷம் திரும்பி வருவேன்'' என்று சொல்லிவிட்டு பறந்து போனது. ஆனால் மலை இன்னும் அழுதுகொண்டே இருந்தது.





அடுத்த வசந்த காலம் வந்த போது, தன் அலகில் ஒரு சின்ன செடியின் விதையைக் கொண்டு வந்தது பறவை. மலையோ அழுவதை நிறுத்தாததால், கண்ணீர் ஓடை இன்னும் அதிகமாகப் பெருக்கெடுத்து ஓடியது. பறவை அந்த விதையை கவனமாக ஒரு இறுகிப்போன பாறையின் இடுக்கில் பத்திரமாக புதைத்து வைத்தது. பிறகு மலையைச் சுற்றிப் பறந்து பாட்டு பாடியது. மலை இன்னமும் பேசாமல் அழுதுகொண்டிருந்ததைப் பார்த்து ''அடுத்த வருஷம் வரேன்'' என்று சொல்லிவிட்டு பறந்து போனது.

சில நாட்களில் அது பாறை இடுக்கில் வைத்த அந்த விதை சின்னதாய் வேர்விடத் தொடங்கியது. அந்த வேர்கள் பாறையின் உள்ளே கொஞ்சம் கொஞ்சமாக ஊடுருவியது. கண்ணீர் ஓடையிலிருந்து தண்ணீர் வேர் போன இடமெல்லாம் பாய்ந்து ஓடியது. மெதுவாக விதை முளைக்க ஆரம்பித்தது. அதன் முதல் இலை சூரியனை நோக்கி கை நீட்டியது. அது தன் சிறிய பச்சை விரல்களால் வானத்தைத் தேடியது.

மலை இன்னும் கவலையில் மூழ்கிப் போய் அழுது கண்ணீரை வடித்தபடியே இருந்தது. இந்த சின்னச் செடியை அது கவனிக்கவில்லை.



அடுத்த வசந்த காலத்தில் பறவை இன்னொரு விதையைக் கொண்டு வந்தது; அதற்கு அடுத்த வசந்த காலத்தில் இன்னொன்றை. இப்படி ஒவ்வொரு தடவையும் ஒரு விதையைக் கொண்டு வந்து அந்தக் கண்ணீர் ஓடையின் அருகில் நட்டு வைத்துவிட்டு மலையைப் பார்த்து பாட்டு பாடியது. மலையோ விடாமல் அழுதுகொண்டே இருந்தது.

இப்படியே பல வருஷங்கள் போக, புதிதாக முளைத்த செடிகளின் வேர்கள் பாறைக்கு உள்ளே போனதும், இறுக்கமான பாறைகள் தளர்ந்து மெதுவான மண்ணாக மாறியது. இதனால் அதன் மேற்பரப்பில் பாசிகள் முளைக்கத் தொடங்கியது. ஓடையை அடுத்த பள்ளங்களில் புற்களும் சின்ன பூச்செடிகளும் முளைத்தன. காற்றில் கொண்டு வரப்பட்ட பூச்சிகள் அந்தச் செடிகளின் இலைகள் மேல் அமர்ந்து நெளிந்தன.





மெல்ல மெல்ல, அந்த முதல் செடி ஒரு சிறிய மரமாக வளர ஆரம்பித்தது. அதன் வேரும், தண்டும் நன்றாக நீண்டு வளர ஆரம்பித்தன. அவற்றின் விரல்கள் தனக்குள் ஆழமாய் போய் தன் இதயத்தில் இருந்த காயங்களை ஆற்றுவதை மலை உணர்ந்தது. அதன் கவலை மறைந்தது. தன்னைச் சுற்றி நடந்த மாற்றங்களை அப்போதுதான் முதன்முதலாக பார்த்தது மலை. இப்போது அதன் கண்ணீர் ஆனந்தக்கண்ணீராக மாறி, சலசலவென ஓடை உற்சாக சத்தம் போட்டது.



பறவையும் வழக்கம்போல் ஒவ்வொரு வருஷமும் ஒரு விதையை கொண்டு வந்தது. மலைக்கு, செடி, கொடி, பூச்சிகள் என நிறைய நண்பர்கள் கிடைத்த மகிழ்ச்சியில் அதிக ஆனந்தக் கண்ணீரை விட்டது. இதனால் பல நீரோடைகள் உருவாகி மலையின் எல்லா பக்கமும் சரிந்து கலகலவென ஓடத் தொடங்கியது. இந்தத் தண்ணீர் மலையின் உச்சியிலிருந்து, அடிவரை வந்து விழுந்து அப்படியே தரையில் குதித்து துள்ளி ஓடியது.

தன் வாழ்க்கையில் மகிழ்ச்சியைக் கொண்டு வந்த பறவையிடம், ''நீ இங்கேயே இருக்க வழியே இல்லையா?'' என்று மலை மீண்டும் கேட்டது. ஆனால் பறவையோ எப்பவும் போல, ''ம்ஹூம், அடுத்த வருஷம் திரும்பி வரேன்'' என்று பதில் சொல்லிவிட்டுப் பறந்தது.



மலையிலிருந்து விழுந்து ஓடிய தண்ணீர், மலையைச் சுற்றி இருந்த சமவெளி இடத்துக்கெல்லாம் உயிர் கொடுத்தது. அங்கும் செடி, கொடிகள் வளர ஆரம்பித்தன. ஒருநாள் பார்த்தால் மலை பார்க்க முடிந்த தூரம் வரை எங்கும் பசுமையாக இருந்தது. பிறகு தூரத்திலிருந்து சில விலங்குகள் மலையைத் தேடி வந்தன.

வந்த உயிரினங்கள் தன்னிடம் உணவும், தங்குவதற்கு இடமும் தேடுவதைப் பார்த்த மலையின் மனதில் நம்பிக்கை பொங்கி வழிந்தது. அவைகளுக்கு உணவும் தங்குவதற்கு இடமும் கொடுத்தது. மேலும் மலை தன் பலத்தையெல்லாம் மரங்களின் வேர்களுக்கு வழங்கியது. அது ஒவ்வொரு கிளையின் நுனி வரைக்கும் பாய்ந்தது. பாலைவனத்தின் நடுவே பசுமையாக உயர்ந்திருந்தது அந்த மலை.

அடுத்த வசந்த காலத்தின் போது பறவை வந்தது. ஆனால் எப்போதும் விதையைக் கொண்டு வரும் பறவை இந்த முறை விதைக்கு பதிலாக ஒரு மெல்லிய குச்சியைக் கொண்டு வந்தது. மலையைச் சுற்றி பறந்து பாட்டு பாடிய பறவை, எல்லாவற்றையம் விட உயரமான ஒரு மரத்தின் மேல் உட்கார்ந்தது. அதுதான் அது கொண்டு வந்து நட்டு வைத்த முதல் விதையிலிருந்து உருவான மரம். அந்த மரமே மலைக்கான தாய்மரம் ஆனது.

தன்னுடைய குஞ்சுகளுடன் கூடு கட்டி வாழ, அம்மரத்தின் ஒரு கிளையின் மீது கொண்டு வந்த குச்சியை வைத்தது அந்தப் பறவை.



அப்போது அது, ''நான்தான் பறவை.
அன்பு மலையே,
இனிமேல் இங்கேயே
தங்குவதற்கு வந்துவிட்டேன்''
என்று பாடியது.

பறவையை நேசித்த மலை
மகிழ்ச்சியாக வாழ்ந்தது.

*There was once a mountain made of bare stone. It should be alone in the middle of a desert plain. No plant grew on its hard slopes, nor could any animal, bird or insect live there.*

*The sun warmed the mountain and the wind chilled it, but the only touch the mountain knew was the touch of rain or snow. There was nothing more to feel.*

*All day and all night the mountain looked only at the sky, watching for the movement of the billowing clouds. It knew the path of the sun that crossed the sky by day, and the course of the moon that crossed the sky by night. On clear nights, it watched the slow wheeling of the far-off stars.*

*There was nothing more to see.*

*But then one day a small bird appeared. She flew in a circle above the mountain, then landed on a ledge to rest and preen her feathers. The mountain felt the dry grasp of her tiny claws; it felt the softness of her feathered body as she sheltered herself against its side. The mountain was amazed, for nothing like this has ever come to it from the sky before.*

*"Who are you?" the mountain asked. "What is your name?"*

*"I am a bird," replied the other. "My name is joy. I come from distant lands, where everything is green. Each spring I fly high into the air, looking for the best place to build my nest and raise my children. As*

*soon as I have rested I must continue my search."*

*"I have never seen anything like you before," said the mountain. "Must you go on? Couldn't you just stay here?"*

*Joy shook her head. "Birds are living things." She explained. "We must have food and water. Nothing grows here for me to eat; there are no streams from which I could drink."*

*"If you cannot stay here, will you come back again some day?" asked the mountain.*

*Joy was silent for a moment. "I fly long distances," she finally said, "And I have rested on many mountains. No other mountain has ever cared whether I came or went, and I should like to return to you. But I could only do so in the spring before I build my nest, and because you are so far from food and water I could only stay a few hours."*
*"I have never seen anything like you before," repeated the mountain. "Even if it were only for a few hours, it would make my happy to see you again."*

*"There is one more thing you should know," said Joy. "Mountains last forever, but birds do not. Even if I were to visit you every spring of my life, there might be only a few visits. Birds do not live very many years."*

*"It will be very sad when your visits stop," said the mountain, "But it would be even sadder if you fly away now and never return."*

*Joy sat very still, nestled against the side of the mountain. Then she began to sing a gentle, bell-like song, the first music the mountain had ever heard. When she had finished her song, she said, "Because no mountain has ever before cared whether I came or went, I will make you a promise. Every spring of my life, I will return to greet you, and fly above you, and sing to you. And since my life will not last forever, I will give to one of my daughters my own name, Joy, and tell her how to find you. And she will name a daughter Joy also, who will come to you in turn. Each joy will have a daughter Joy, so that no matter how many years pass, you will always have a friend to greet you and fly above you and sing to you."*

*"I still wish you could stay," the mountain said, "But I am glad you will return."*

*"Now I must go," said Joy, "For it is a long way to the lands that have food and water for me. Goodbye until next year." She soared off, her wings like feathered fans against the sun. The mountain watched her until she disappeared into the distance.*

*Year after year, when every spring came, a small bird flew to the mountain, singing, "I am joy and I have come to greet you." And for a few hours, the bird would fly above the mountain, or nestle against its side, singing. At the end of each visit, the mountain always asked, "Isn't there some way you could stay?" And Joy always asked, "Isn't there some way you could stay?" And Joy always answered, "No, but*

*I will return next year."*

*Each year the mountain looked forward more and more to Joy's visit; each year it grew harder and harder to watch her go. Ninety-nine springs came and went in this way. On the hundredth spring, when it was time for Joy to leave, the mountain asked once more, "Isn't there some way you could stay?" Joy answered, as she always did, "No, but I will return next year."*

*The mountain watched as she disappeared into the sky, and suddenly its heart broke. The hard stone cracked, and from the deepest part of the mountain tears gushed forth and rolled down the mountainside in stream.*

*The next spring a small bird appeared, singing, "I am Joy and I have come to greet you." This time the mountain did not reply. It only wept, thinking of how soon she would have to leave, and of all the long months before she would come again. Joy rested on her ledge, looking at the stream of tears.*

*Then she flew above the mountain, and sang as she always had. When it was time for her to go, the mountain still wept. "I will return next year," said Joy softly, and she flew away.*

*When the next spring came, Joy returned, carrying in her beak a small seed. The mountain still wept a stream of tears. Joy carefully tucked the seed into a crack in the hard stone, close to the stream so that it would stay moist. Then she flew above the mountain, and sang to it.*

*Seeing that the mountain was still unable to speak, she flew away once more.*

*During the weeks that followed, the seed in the crack of the rock began to send down tiny roots. The roots reached into the hard stone, little by little spreading into yet smaller cracks, breaking through the hardness. As the roots found water in the cracks and drew food from the softening stone, a shoot rose from the seed into the sunlight. Slender fingers of green reached toward the sky. The mountain, however, was still deep in sorrow, blind with tears. It did not notice a plant so small.*

*The next spring Joy brought another seed, and the spring after that another. She placed each one in a protected place near the stream of tears, and sang to the mountain. The mountain still only wept.*

*As years passed in this way, the roots of new plants softened the stone near the stream of tears. Softened stone turned to soil, and moss began to grow in sheltered corners. Grasses and little flower in plants sprouted in hollows near the stream. Tiny insects, carried to the mountain by the winds, scurried among the leaves.*

*Meanwhile, the roots of the very first seed went deeper and deeper into the heart of the mountain. Above the ground, what has started as a tiny shoot was growing into the trunk of a young tree, it's branches offering their green needles to the sun. At last, the mountain felt the roots reaching down like gentle fingers, filling and healing the cracks*

*in its heart. Sorrow faded away. The mountain saw the changes that had been taking place, and felt it's tears change to tears of happiness.*

*Each year Joy returned, bringing another seed. Each year, more streams ran laughing down the mountain's sides, and the ground watered by the new streams grew green with trees and other plants.*

*Now that the mountain no longer wept with sorrow, it began to ask once more, "Isn't there some way you could stay?" But Joy still answered, "No, but I will return next year."*

*The years continued to pass, and the streams carried life far out into the plain surrounding the mountain. Finally, as far as the mountain could see, everything was green. From lands beyond the horizon, small animals began to come to the mountain. Watching those living things find food and shelter on its slopes, the mountain suddenly felt a surge of hope. Opening its heart to the roots of the trees, it offered them all its strength. The trees stretched their branches yet higher toward the sun, and hope ran like a song from the heart of the mountain to the very tip of every branch.*

*And sure enough, when the next spring came, Joy flew to the mountain carrying not a seed, but a slander twig. Straight to the tallest tree on the mountain she flew, to the tree that had grown from the very first seed. She placed the twig on the branch in which she would build her nest.*

*"I am Joy," she sang, "and I have come to stay."*

கத்தரிக்காய்க்கு குடை புடிக்க
கத்துக்கொடுத்தது யாரு
அந்த கடலக்கொட்டைக்கு
முத்துச்சிப்பி போல மூடிவச்சது யாரு
பூசணி தலையில் பூவை அழகா
முடிஞ்சுவச்சது யாரு
வாசனையில்லா காகிதப்பூவுக்கு
வர்ணமடிச்சது யாரு
பருத்திச்செடிக்கு பஞ்சுமிட்டாய
தின்னக்கொடுத்தது யாரு
ஆலமரத்துக்கு அத்தன ஊஞ்சல
ஆடக்கொடுத்தது யாரு
ஆற்றில் குளிக்காத மல்லிகைப்பூவுக்கு
அத்தனை வெண்மை ஏது
வெண்டச்செடியும் விரலநீட்டி
கேள்விகேக்குதா பாரு
மாங்கனிக்கு மணிமூக்குவச்சு
மயக்கவச்சது யாரு
மட்டைக்குள்ளிருக்கும் தேங்காய்க்கு
கண்ண ஒட்டவச்சது யாரு
தாவி மரத்துல ஏறும் கொடிக்கு
காலு இருக்குதா பாரு
தொட்டாச்சிணுங்கி பட்டுன்னு மூடிக்க
கட்டளை போட்டது யாரு
யாரு யாரு யாரு காரணந்தெரிஞ்சா
கூறு கூறு கூறு ...

- வையம்பட்டி முத்துச்சாமி

